39. प्रशंसन्तो नराभासान्प्रलपन्तोऽन्यथान्यथा ।
कथं तरन्तुकवयः कामपारम्यवादिनः ।।

Prashamsanto naraabhasan Pralapanto anyathaanyathaa I
Katham Tarantukavaya: Kaamapaaramyavaadina: II

**39.** சில கவிகள், முகஸ்துதி செய்யும் பொருட்டு, மிக கீழ்தரமான மக்களையும். பொருளாசைக் கொண்டு துதிக்கின்றனர். இவர்கள் எவ்வண்ணம் ஆசைக் கடலைக் கடக்கப் போகின்றார்கள்.

Some poets, out of sycophancy, sing the glory of lowly people for the sake of earning money. How are these people going to cross the ocean of desires ?

40. यत्संदर्भे यदुल्लेखे यद्व्यङ्ग्ये निभृतं मनः ।
समाधेरपि तज्ज्यायः शंकरो यदि वर्ण्यते ।।

Yatsamdarbhe Yadullekhe Yedvyangye Nibhrutam Mana: I
Samaadherapi Tajjyaaya: Shankaro Yadi Varnyate II

**40.** ஒரு கவி வர்ணிக்கும் பாடலின் கற்பனையிலோ, நிகழ்ச்சியிலோ அல்லது அதன் உட்பொருளிலோ, மனம் அசைவற்று நிற்குமானால், மேலும் பகவான் ஸ்ரீ சங்கரன், அதன் கருவாக (பாட்டுடைத் தலைவனாக) அமைந்துவிட்டால், அந்த நிலை சமாதி நிலையை விட உயர்ந்தது.

If one's mind is absorbed deeply in the composition and description of poetry and if Lord Shiva happens to be the object

of such poetry, that state will indeed be a state better than the real state of Samadhi, the blissful state.

41. गृहिणी भगिनी तस्याः श्वशुरौ श्याल इत्यपि ।
प्राणिनां कलिना सृष्टाः पञ्च प्राणा इमेऽपरे ।।

Gruhini Bhagini Tasyaa: Svashurau Shyaala Ityapi I
Praaninaam Kalina Srushtaa: Pancha Pranaa ImeSPare II

**41.** நான்முகன் மனிதர்களுக்கு ஐந்து பிராணன்களை அளித்துள்ளான். அதைத் தவிர கலிப்புருடன் மக்களுக்கு கலியில் மற்றுமோர் ஐந்து உயிர்களை அளித்துள்ளான். அவை முறையே மனைவி , அவள் சகோதரி, சகோதரன், மாமியார், மாமனார் முதலியோர்.

Lord Brahma, the creator has granted to human beings. In addition to this Kali purusha (the Lord of Dark Age, Kali) has granted five more pranas namely, wife, her sister, father-in-law, mother-in-law.

42. जामातरो भागिनेया मातुला दारबान्धवाः ।
अज्ञाता एव गृहिणां भक्षयन्त्याखुवद् गृहे ।।

Jamaataro Bhaagineyaa Maatulaa Daarabhaandvaa: I
Agnyaataa Eva Gruhinaam Bhakshayantyaakhuvad gruhe II

**42.** ஒருவர் வீட்டில் அவருடைய மருமகன், உடன்பிறந்தவர்களின் பிள்ளைகள், மாமாவின்

பிள்ளைகள், மனைவியின் உறவினர்கள் ஆகியோர் அவர் அறியாமலேயே எலிகள் போலச் சுரண்டித் தின்பர்.

In one's own house, his son-in-law, nephews, cousins, wife relatives will eat slowly into his weath like rats without his knowledge.

43. मातुलस्य बलं माता, जामातार्दुहिता बलम् ।
श्वशुरस्य बलं भार्या, स्वयमेवातिथेर्बलम् ।।

Maatulasya Balam Mata, Jaamaaturduhitaa Balam I
Svashurasya Balam Bharya, Svayameva atither Balam II

43. ஒருவன் வீட்டில் வசிக்கும் மாமனுக்கு, அவன் தாய் (அவ்வீட்டுத்தலைவி, அம்மானுடைய சகோதரி) பக்கபலம். அவனுடைய மாப்பிள்ளைக்கு தன் பெண் பக்க பலம். மாமனாருக்கு அவன் மனைவி பக்கபலம். அவனுடைய வீட்டு விருந்தாளிக்கு அவனே பக்க பலம்.

For one's own maternal, who has come to stay with him, his mother will be the strength (as she will automatically take care of her brother), for one's son-in-law, his daughter (as she will take of her husband ) will be the strength, for his father-in-law, his wife (as she will take care of her father) and to a guest he himself is the strength .

44. जामातुर्वक्रता तावद् यावच्छ्यालस्य बालता ।
प्रबुध्यमाने सारल्यं प्रबुद्धेऽस्मिन् पलायनम् ।।

Jaamaaturvakrataa Taavad Yaavacchyaalasya Baalataa I
Prabudhyamaane Saaralyam Prabudhessmin Palaayanam II

**44.** ஒருவன் மைத்துனன் பாலகனாக உள்ள வரையில், அவனுக்கு வக்ர குணங்கள் இருக்கும். அம்மைத்துனன், குடும்பச் சுமையை ஏற்கும்பொழுது, அம்மாப்பிள்ளை குணம் மாறும் கடைசியில், மைத்துனன் தன்னிலை உணர்ந்தவுடன், மாப்பிள்ளை மாமனார் வீட்டைவிட்டு தானே ஓடிவிடுவான்.

So long as his brother-in-law is child and innocent, a son-in-law will be cunning and smart, but he will change when his brother-in-law starts seeing through his mischiefs. He will finally will run away from that house, when his brother-in-law starts exposing him.

45. भार्या ज्येष्ठा शिशुः श्यालः श्वश्रूः स्वातन्त्र्यशालिनी ।
श्वशुरस्तु प्रवासीति जामातुर्भाग्यधोरणी ।।

Bharya Jyeshta shishu: Shyaala: Shvashru: Svaatantrya Shaalini I
Shvashurastu Pravaasiti Jaamaaturbhagyadhorani II

**45.** ஒருவனுடைய மனைவி, அவன் மாமனார் வீட்டின் மூத்தப்பெண்ணாகவும், அவன் மைத்துனன் சிறுவனாகவும், அவன் மாமியார் தானே வீட்டுப் பொறுப்புகளை சுமப்பவளாகவும், மாமனார் நீண்ட பயணம் சென்றவராகவும் இருந்து விட்டால், அம்மனிதனே பாக்யசாலி ஆவான்.

Only that son-in-low is lucky, whose wife is eldest child in his wife's family, his brother-in-law is a small child, his mother-in-law acts independently and father-in-law has gone on a long voyage or tour.(Such a son-in-law, can rule that house to his heart's delight)

46. भूषणैर्वसनैः पात्रैः पुत्राणामुपलालनैः ।
सकृदागत्य गच्छन्ती कन्या निर्मार्ष्टि मन्दिरम् ।।

Bhushanairvasanai Paatrai: Putraanaamupalaallanai: I
Sakrudaagatya Gacchanti Kanya Nirmaarshti Mandiram II

**46.** தன் தந்தை வீட்டுக்கு வந்து செல்லும் பெண் அங்கிருந்து அவள் கொண்டுபோகின்ற ஆடை ஆபரணங்களாலும் குழந்தைகளுக்குரிய சாமான்கள் மூலம் அவ்வீட்டையே துடைத்து விடுகிறாள்.

When a married woman visits her father's place, she almost empties up that house by taking with her, the rich clothes, ornaments and other things for the childern.

47. गृहिणी स्वजनं वक्ति शुष्काहारं मिताशनम् ।
पतिपक्ष्यांस्तु बह्वाशान् क्षीरपांस्तस्कारानपि ।।

Gruhini Svajanam Vakti Sushkaahaaram Mitaashanam I
Patipaksyaamstu Bahvaashaan ksheerapamstaskaraanapi II

**47.** ஒரு இல்லத்தரசி, தனது பிறந்த வீட்டார் வந்தால் அவர்கள் எளிமையான ஆகாரம் உண்கிறார்கள் என்றும், தன் புகுந்த வீட்டார் வந்தால் அவர்கள் பால் தயிரை குடித்து விட்டார்கள் என்றும், உணவுப் பண்டங்களை திருடி விட்டனர் என்றும் கூறுகின்றாள்.

A housewife aways complains that when her own people visit the house, they have simple foodwhereas when her husband's

relatves visit, they always eat all rich food including healthy milk, curd etc. and that they also steal the food items when they go back.

48. भार्ये द्वे पुत्रशालिन्यौ भगिनी पतिवर्जिता ।
अश्रान्तकलहो नाम योगोऽयं गृहमेधिनाम् ।।

Bhaarye dve putrashalinyau Bhagini Pativarjitaa I
Ashraantakalaho Nama YogoSyam Gruhamedhinaam II

48. சில குடும்பங்களுக்கு ஓய்வற்ற சண்டை யோகம் என்னும் யோகம் அமைவதுண்டு. எப்படியெனில், அவர்களுக்கு இரு மனைவியர். இருவருக்கும் குறைவற்ற குழந்தைகள். அவருடையக் கூட பிறந்தவள் விதவையாகவோ கணவனால் கைவிடப்பட்டு அவர்கூட வசித்து வந்தால் அவ்வகை யோகம் அமைவதுண்டு.

Some householders have a yoga or luck called " endless fighting yoga or luck". They are blessed with this yoga when they have two wives and a sister who is either a widow or divorcee, and all these live together in the same house.

49. द्वे भार्ये बहवः पुत्रा दारिध्रियं रोगसंभवः ।
जीर्णो च मातापितरावेकैकं नरकाधिकम् ।।

Dve Bharye Bahava: Putraa Daridhriyam Rogasambhava I
Jeernau cha Matapitararaavekaika Narakaadhikam II

**49.** இரு மனைவியர் மக்கள் பலர். வறுமை, நோயால் அவதி, வயது முதிர்ந்த பெற்றோர். இவை ஒவ்வொன்றும் ஒருவர்க்கு அமைந்தால் அதுவே நரகவேதனையாகும்.

A person who has two wives, countless children, poverty, suffering due to disease and aged parents, will undergo suffering that is equivalent to hell.

(Verses from 41 to 49 must have been composed by the poet keeping in view the social structure that was prevalent during his time when polygamy was common, and joint family system prevalent everywhere unlike nucleus structures of families of the present times)

50. स्मृते सीदन्ति गात्राणि दृष्टे प्रज्ञा विनश्यति ।
अहो महदिदं भूतमुत्तमर्णाभिशब्दितम् ॥

Smrute Seedanti Gaatraani Drushte Prangya Vinasyati I
Aho Mahadidam Bhutamutthamarnabhi Shabditam II

***50.*** ***கடன்காரன் என்னும் ஒரு பெரிய பூதத்தை நினைத்த அளவில் ஒரு கடன்பட்டவருடைய குடல்கள் நிலைக்குலைந்து விடுகின்றன. அவனைப் பார்த்தவுடன் புத்தித் தடுமாறி நாசமடைந்து விடுகின்றது என்ன விந்தையிது ?***

A debtor is mortally shaken to his core at the very thought or mention of the name of a creditor like the mention of a ghost. At the very sight of the creditor, his entrails are drawn out. What a wonder ?

51. अन्तकोऽपि हि जन्तूनामन्तकालमपेक्षते ।
न कालनियमः कश्चिदुत्तमर्णस्य विद्यते ।।

Antakoऽpi hi Jantunaamantakaalamapekshate I
Na Kaalaniyama: Kaschiduttamarnasya Vidhyyate II

*51.* யமதர்ம ராஜன் ஒரு ஜந்துவினுடைய முடிவு வரை காத்திருந்து பிறகே உயிரைப் பறிக்கிறார். ஆனால் ஒரு கடன்காரன் ஒரு கால நியமம் இன்றியே கடன் வாங்கியவனின் உயிரைப் பறிக்கிறான்.

The God of death, Lord Yamadharma, always waits for the last moment of a creature's scheduled time before he takes out the life of that creature (human beings and other creatures) But a Creditor, takes out the life of a debtor at any point of time.

52. न पश्यामो मुखे दंष्ट्रां न पाशं वा कराञ्चले ।
उत्तमर्णमवेक्ष्यैव तथाप्युद्विजते मनः ।।

Na Pashyaamo Mukhe Damshtraam Na Paasham Va Karaanchale I
Uttamarnamavekshyaiva Tataapyudvijate Mana: II

*52.* யமதர்மனைப் போல் ஒரு கடன் கொடுத்தவனின் முகத்தில் கோரைப்பற்களையும் கையில்

பாசக் கயிற்றையும் பார்க்க முடியாது. இருப்பினும் அவனைக் கண்டவுடனேயே கடன் வாங்கியவனின் மனம் குலை நடுங்குகிறது.

As in the care of Lord of death one may not find protruding teeth and noose in the case of a Creditor. Yet a debtor's mind trembles at the very sight of a creditor.

53. शत्रौसान्त्वंप्रतीकारःसर्वरोगेषुभेषजम् ।
मृत्योर्मृत्युंजयध्यानं दारिद्रये तु नकिंचन ।।

Shatrau Saantvam Pretikaara: Sarvarogheshu Bheshajam I
Mrutyormrutunjaya Dhyanam Daaridraye tu Na Kinchana II

***53.*** ஒரு பகைவனை அவனை திருப்திச் செய்து சமாதானப்படுத்தி விடலாம் எல்லாப் பிணிகளுக்கும் மருந்தும் உண்டு. இறக்காமல் இருக்க ம்ருத்யுன்ஜயரைத் தியானித்து நீண்ட ஆயுள் பெறலாம். ஆனால் வறுமையை தடைச் செய்யும்வழி என்பது ஒன்றுமேயில்லை.

A person can make peace with an enemy by pleasing him. For all the diseases, it is possible to find medicines in the world; in order to live a long healthy life, Lord Shiva can be worshipped. But there is nothing in this world that could remove the Poverty.

54. शक्तिं करोति संचारे शीतोष्णे मर्षयत्यपि ।
दीपयत्युदरे वह्निं दारिद्र्यं परमौषधम् ।।

Shaktim Karoti Samchare Sheetoshne marshayatyaapi I
Deepayatyudarevahnim Daridryam Paramaushadham II

***54.*** வறுமை பலயிடங்களில் ஓடித்திரிவதின் மூலம் உடலுக்கு நல்ல சக்தியைத் தருகின்றது. குளிரையும்

வெய்யிலையும் தாங்கச்செய்கின்றது. வயிற்றில் நன்கு ஜீரணிக்கும் நெருப்பை வளர்க்கின்றது. எனவே வறுமையே சிறந்த மருந்தாகும்.

When on account of  to poverty, a person is forced to roam from place to place, his body gets good energy. It enables him to withstand the cold and the heat. It increases the fire of digestion in the stomach. Hence, poverty is the best medicine.

55. गिरंस्खलन्तीं मीलन्तीं दृष्टिं पादौ विसंस्फुटौ ।
प्रोत्साहयति याञ्चायां राजाज्ञेव दरिद्रता ।।

Giramsskhalantiim Milantiim Drushtim Padau Visamsphutau I
Protsaahayati Yaanchaayaam Rajagnyeva daridrataa II

***55.*** ***வறுமையுடையவன் நாக்கில் வார்த்தைகள் குழறித் தடங்குகின்றன. கண்கள் மூடுகின்றன. கால்கள் நடந்து புண்படுகின்றன. அப்பொழுது வறுமை என்னும் அரசன் அவனைப் பிச்சையெடுக்க ஏவுகின்றான்.***

Due to extreme poverty, the tongue of a poor man babbles and the words the warble out.  His eyes close on their own.The feet are rendered sore through continous roaming. At that time, the king named Poverty, prods him  to take to begging.

56. जीर्यन्ति राजविद्वेषा जीर्यन्त्यविहितान्यपि ।
आकिंचन्यबलाढ्यानामन्ततोऽश्मापि जीर्यति ।।

Jeeryanti Raajavidveshaa Jeeryantya Vihitaanyapi I
Aakinchanya Balaadyaanaamantatosmaapijeeryati II

***56.*** ***வறுமையுற்றவனுக்கு அரசனால் ஏற்படும் தீமைகளும் ஜீரணமாகி விடும் செய்யத் தகாதவைகளை***

அவன் செய்தாலும் அவையும் ஜீரணமாகிவிடும். கடைசியில், பசியின் காரணமாக கல்லை உண்டால் அவையும் செரித்துவிடும்.

A man reduced to poverty (a poor man), will be able to digest the wrongs done to him by a King. Even if he indulges in heinous acts (crimes), those acts will also be digested. Ultimately, if he eats stones, due to extreme poverty, even those will get digested.

57. नास्य चोरा न पिशुना न दायादा न पार्थिवाः ।
दैन्यं राज्यादपि ज्यायो यदि तत्त्वं प्रबुध्यते ।।

Naasya choraa Na pishunaa Na Daayaadaa Na Parthivaa: I
Dainyam Rajyaadapi Jyaayo yaditatvam Prabudhyate II

57. வறுமையினால் கள்வர் பயமில்லை. கோள் சொல்பவர்களோ பங்காளிகளோ கிடையாது. அரசருடைய பயமும் இல்லை. எனவே, இவ்வுண்மை என்னும் பிரம்மத்தை அறியப் பெற்றால், அம்மனிதனுக்கு வறுமை என்பது அரசினும் உயரியது.

Due to poverty, there is no fear of thief, tale bearers or traitors or even ruler. Hence, one who understands this God of Supreme Truth, will consider Poverty even superior to a King.

58. प्रकाशयत्यहंकारं प्रवर्तयति तस्करान् ।
प्रोत्साहयति दायादान्लक्ष्मीः किंचिदुपस्थिता ।।

Prakaashayat Ahamkaram Pravartayati Taskaraan I
Protsaahayati Daayaadaanlakshmi Kinchidupasthitaa II

***58.*** ஒரு செல்வந்தனிடமுள்ள செல்வமே அவனிடமுள்ள அஹங்காரத்தை வெளியே கொண்டு வந்துவிடும். செல்வமே திருடர்களை திருடத் தூண்டுகிறது. அவனுடைய பங்காளிகளும் மிக்க மகிழ்ச்சி அடைகின்றனர்.

The ego of a rich man would come out in the open, on its own. That will impel the thieves to steal his wealth. His own relatives will become very happy and stake a claim on his wealth.

59. विडम्बयन्ति ये नित्यं विदग्धान् धनिनो जनाः ।
त एव तु विडम्ब्यन्ते श्रिया किंचिदुपेक्षिताः ।।

Vidambayanti Ye Nityam Vidagdhaan Dhaninojanaa: I
Ta eva tu vidambyante sriyaakinchidupekshitaa: II

***59.*** செல்வந்தர்கள், செல்வச்செருக்குற்று ஏழைகளை எப்பொழுதும் இகழ்கின்றனர். ஆனால் அவர்களே பின்னர் திருமகளால் புறக்கணிக்கப்பட்டு, ஏழைகளால் இகழப்படுகின்றனர்.

The rich people puffed up with pride of their wealth, always insult the poor. But, the same people, in due course of time, deserted by the Goddess of wealth are ridiculed by the poor.

60. प्रामाण्यबुद्धिः स्तोत्रेषु देवताबुद्धिरात्मनि ।
कीटबुद्धिर्मनुष्येषु नूतनायाः श्रियः फलम् ।।

Praamaanyabudhi: strotreshu devataabudhiraatmani I
Keetabudhirmanushyeshu Nootanayaha: Sriya: Phalam II

**60.** திடீர் செல்வந்தர்களுக்கு சில குணங்கள் ஏற்படுவதுண்டு. அக்குணங்கள் முறையே இல்லாத குணங்களைச் சொல்லித் துதித்தால் அவற்றை உண்மையென்று நம்புவது. தன்னை ஆண்டவனாகவே நினைத்தல், மற்றவர்களை புழுவுக்கு சமானமாக நினைத்தல்.

People who suddenly become rich, develop certain qualities. Like, when others praise the qualities which they do not have, they start believing that they have those qualities; they imagine that they are like Gods and treat others like dirt.

61. शृण्वन्त एव पृच्छन्ति पश्यन्तोऽपि न जानते ।
विडम्बनानि धनिकाः स्तोत्राणीत्येव मन्वते ॥

Srunvantha yeva Pruchanthi pasyanthoऽpi na janathe I
Vidabanaani dhanikaa: sthothranithyeva manvathe II

**61.** செல்வந்தர்கள், ஒரு விஷயத்தை கேட்டுக் கொண்டிருக்கும்போதே திரும்பத் திரும்ப கேட்கின்றனர். ஒரு பொருளைப் பார்ததும் அதைப் பற்றி உணர்வதில்லை. தங்களைப் பற்றி சொல்லப்படுகின்ற பரிகாசப் பேச்சுகளையும் தங்களைப் புகழ்பாடும் துதியாகவே நினைக்கின்றனர்.

Rich people wallow in flattery by repeatedly listening to the same praise heaped on them. They are highly pretentious by seeking to ignore things though noticed by them. They take even the words of ridicule directed at them as words of praise.

62. आवृत्य श्रीमदेनान्धानन्योन्यकृतसंविदः ।
स्वैरं हसन्ति पार्श्वस्था बालोन्मत्त पिशाचवत् ।।

Aaavrutya srimadenaandaananyonya krutasamvida: I
Svairam Hasanti Parshvastha Balonmatta Pishachavat II

**62.** செல்வத் திமிர்கொண்ட பணக்காரர்களை, ஏனைய மக்கள், சிறுக்குழந்தைகளையும், பைத்தியம் பேய் பிடித்தவர்களையும், சூழ்ந்துகொண்டு தங்களுக்குள் சாடைக்காட்டி ஏளனம் செய்வதுபோல், ஏளனம் செய்கின்றனர்.

Rich people, puffed up with the pride of wealth, are scoffed at by people in the same way as children, mad people or possessed persons are surrounded by people who ridicule them by exchanging of signs amongst themselves.

63. स्तोतव्यैः स्तूयते नित्यं सेवनीयैश्च सेव्यते ।
न बिभेति न जिह्वेति तथापि धनिको जनः ।।

Stotavyai: stuyate Nityam Sevaniyaischa Sevyate I
Na Bibheti Na Jihveti Tathapi D haniko jana: II

**63.** செல்வமுள்ள மனிதன் ஒருவன், துதிக்கத் தகுந்த பெரியோர்களால் துதிக்கப்படுகின்றான். அதேபோல், வணங்கக் கூடிய பெரியோர்களால் அவன் வணங்கப்படுகின்றான். அதன் பொருட்டு அவன் வெட்கமோ, அச்சமோ அடைவதில்லை. (அவன் செல்வச் செருக்கு அவ்விதம் தன்னை துதிக்கும், வணங்கும், பெரியோர்களைத் தடுக்க செய்வதில்லை.)

A wealthy man is worshipped by the elders who are fit enough to be honoured by him. By that, he is neither ashamed nor afraid of such actions.(In fact, he should be ashamed when elders salute him).

64. क्षणमात्रं गृहावेशो याममात्रं सुरामदः ।
लक्ष्मीमदस्तु मूर्खाणामादेहमनुवर्तते ।।

Kshanamaatram Gruhaavesho yaamaamatram Suraamada: I
Lakshmimadastu Murkhaanamaadehamanuvartate II

**64.** ஒருவனுக்கு ஆவேசம் வந்தால் ஒரு க்ஷண நேரம் தங்கும். கள் குடித்த போதை சில மணிநேரம் தங்கி விலகும். ஆனால் செல்வத்தினால் ஏற்படும் ஆணவம் அவன் உடல் உள்ளவரைத் தங்கும்.

When a man is possessed,it lasts for some time. When a man is inebrirated, such a state of inebriation last for some hours. But when a man becomes arrogant due to his wealth, such arrogance will last till the last moment of his life.

65. श्रीर्मासमर्धमासं वा चेष्टित्वा विनिवर्तते ।
विकारस्तु तदारब्धो नित्यं लशुनगन्धवत् ।।

Srirmasamardhamaasam Vaa cheshtitvaa Vinivartate I
Vikaarastu Tadaarabdho Nityam Lashunagandhavat II

**65.** ஒருவனுக்கு செல்வம் ஒரு பாதி மாதமோ முழுமாதமோயிருந்து விலகிவிடலாம். ஆனால், அதன்

பொருட்டு அவனுக்கு ஏற்படும் மனோ விகாரம், உள்ளிப்பூண்டின் மணம் போல் அவனிடம் நிரந்தரமாகத் தங்கி விடுகின்றது.

The wealth that comes to a man, may stay with him for half a month or full month upon which it may disappear. But the concelt arising out of such wealth will stay with him permanently even as the smell of a garlic lingers even after it is swallowed or removed from its place.

66. कण्ठेमदः कोद्रवजो हृदिताम्बूलजो मदः ।
लक्ष्मिमदस्तु सर्वाङ्गे पुत्रदारमुखेष्वपि ॥

Kantemada: Kodravajo Hrutitambulajo Mada: I
Lakshmimadastu Sarvange Putradaramukheshvapi II

**66.** வரகை உண்பதினால் ஏற்படும் சிரமம் தொண்டை வரைப் பரவியிருக்கும். வெற்றிலையைத் தின்பதால் ஏற்படும் கரிப்பு இருதயம் வரை பரவியிருக்கும். செல்வத்தினால் ஏற்படும் மதம் ஒரு மனிதனுடைய உடம்பு முழுவதும் மற்றும் அவனுடைய மனைவி மக்களின் முகங்களிலும் பரவியிருக்கும்.

The taste of kodrava grains stays till it reaches the throat, the taste of chewed betal leaves extends upto the heart. But the arrogance arising out of the posession of wealth extends to the whole body of a man. Such an arrogance will also be reflected on the faces of his wife and children. (their actions and speach will drip with such arrogance).

67. यत्रासीदस्ति वा लक्ष्मीस्तत्रोन्मादः प्रवर्तताम् ।
कुलेऽप्यवतरत्येष कुष्ठापस्मारवत् कथम् ।।

Yatraaseedasti Vaa Lakshmistatronmaada: Pravaratatam I

Kuleऽpyavataratyesha kushtaapasmaaravat katham II

**67.** *எவனிடத்தில் முன்பு செல்வம் இருந்ததோ, தற்போது இருக்கின்றதோ, அவனிடத்தில் அச்செல்வத்தினால் ஏற்பட்ட மதத்தினால் மன மயக்கம் ஏற்பட்டு அது குஷ்ட நோய் போலவும், காக்கை வலிப்பு போலவும், அவன் குடும்பத்தில் தொடர்ச்சியாக வந்துக்கொண்டிருக்கும்.*

For one who had wealth in the past and for one who currently has wealth , the inebriation caused in the mind due to that wealth continuously afflicts his family like leprosy and epilepsy.

68. अध्यापयन्ति शास्त्राणि तृणीकुर्वन्ति पण्डितान् ।
विस्मारयन्ति जातिं स्वां वराटाःपञ्चषाः करे ।।

Adhyapayanti Shaastraani Trunikurvanti Panditaan I

Vismaarayanti Jaatim Svaam Varaataa: Panchasha: Kare II

**68.** *கையில் ஐந்தாறு காசு (கொஞ்சம் செல்வம் இருந்தால்) இருந்துவிட்டால், மற்றவர்களுக்கு சாத்திரங்களை போதிக்கத் அது தொடங்குகின்றன. பெரும் அறிஞர்களையும் துச்சமாக மதிக்கச் செய்யும். தன் குலப்பெருமையும் மறக்கச் செய்யும்.*

Possession of even five or six coins (having a small wealth also) induces one to teach others on the finer points of Shastras;

impels one to disregard even great scholars and makes him forget the honour of his family.

69. बिभर्तु भृत्यान् धनिको दत्तां वा देयमर्थिषु ।
यावद्याचकसाधर्म्यं तावल्लोभो न मृष्यति ।।

Bibhartu Brutyaan Dhaniko Datthaam Vaa Deyamarthishu I
Yaavad Yaachakasardhamyam Taavallobho Na Mrushyati II

69. செல்வமுள்ளவன் தன் பணியாளர்களுக்கு பணம் கொடுத்துதவட்டும். யாசித்துக் கேட்பவர்களுக்கு வேண்டியப் பொருட்களைக் கொடுக்கட்டும். இருப்பினும் ஒரு யாசிப்பவனுடைய திறமை யாசிப்பதில் எவ்வளவு உண்டோ, அவ்வளவு திறமை ஒரு செல்வந்தனுடைய உலோபக்குணத்திற்குவுண்டு. இல்லையெனில், அக்குணம் கொடுப்பதைப் பார்த்து பொறுக்காது.

Let a wealthy man help his servants other needy people by generously giving money. Although the greed in him will restrain him from parting with his money, the expertise of the needy person will extract this money from him. Otherwise, his miserly quality will not allow the charity to take place.

70. धनभारोहि लोकस्य पिशुनैरिव धार्यते ।
कथं ते तल्लघूकर्तुं यतन्तेऽपरथा स्वतः ।।

Dhana Bharohi Lokasya pishunairiva dhaaryate I
Katham Te Thallaghukartum yatanteSparathaa svata: II

**70.** உலகில் ஒரு செல்வந்தனுடைய பண பாரத்தின் சுமையை சுமப்பவர்கள் கூடவுள்ள கோள் சொல்பவர்கள் இல்லையெனில், அச்சுமையை குறைப்பதற்காக அவர்கள் ஏன் தாமாக முன் வரவேண்டும்? (கோள் சொல்பவர்கள் சேர்க்கையினால் ஒருவனுடைய செல்வம் தானாகவே கரைந்துவிடும் என்பது கருத்து.

In the world carrying the burden of a rich man's wealth is entrusted to the tattle tale bearers. Otherwise, why they should come forward on their own to reduce the weight of that wealth. (If a wealthy man is in the company of tattle tale bearers, slowly his wealth will melt away)

71. श्रमानुरूपं पिशुने किमुपक्रियते नृपैः ।
द्विगुणं त्रिगुणं चैव कृतान्तो लालयिष्यति ।।

Sramaanurupam Pishune Kimupakriyate Nrupai: I
Dvigunam Trigunam Chaiva Krutaanto Laalayishyati II

**71.** மற்றவர்களைப் பற்றி தங்களிடம் கோள் சொல்பவர்களுக்கு என்ன கைமாறு செய்கின்றனர்? ஒன்றும் செய்து விடுவதில்லை. ஒன்றுமில்லை. ஆனால் இவ்வுலகில் அவர்கள் செய்யும் கடின உழைப்பிற்கு ஏற்ற வண்ணம். அதற்கு ஈடாக என்ன ? இரண்டு மூன்று மடங்கு அதிகமாகவே எமதர்மன் பரிசு கொடுப்பான். (கோள் சொல்பவர்கள் யமவேதனையை நன்கு அனுபவிப்பர் என்பது கருத்து.)

The Kings do not sufficiently help the tale bearers in proportion to thetroubles taken by such people. On hte contrary,

they are richly rewarded twice or thrice over by Lord Yama, the Lord of Death. (Tale bearers will undergo suffering at the hands of Lord Yama, for their sins.)

72. गोकर्णे भद्रकर्णे च जपो दुष्कर्मनाशनः ।
राजकर्णे जपः सद्यः सर्वकर्मविनाशनः ।।

Gokarne Bhadrakarne cha Japo dushkarma Naashana: I
Rajakarnejapa: Sadhya: Sarvakarma vinaashana: II

72. கோகர்ணம், பத்திரகர்ணம் முதலிய புனித இடங்களில் செய்கின்ற ஜபத்தின் பலனாவது சிறிதளவு செய்த பாப செயல்களையும் அழித்துவிடும். ஆனால் அரசனுடைய காதில் செய்யப்பட்ட ஜபமானது, எல்லா செயல்களையும் அழித்துவிடக்கூடியது.

Even a little japa (rolling the beads by taking the holy name of God) done in holy places such as Gokarna or Bhadrakarna will destroy all the sins done by a person. However, the japa (carrying tales) uttered in the ears of the King will instantly destroy all actions. (Tales uttered by tale bearers mislead the Kings and lead them to take wrong decisions)

73. न स्वार्थं किंचिदिच्छन्ति न प्रेर्यन्ते च केनचित् ।
परार्थेषु प्रवर्तन्ते शठाः सन्तश्च तुल्यवत् ।।

Nasvaartham Kimchidichhanti Na Preryante Cha Kenachit I
Paraartheshu Pravartante Shataa: Santascha Tulyavat II

**73.** நல்லவர்கள் தங்களுக்காக எதையும் விரும்புவதில்லை. (பிறருக்காக வாழ்பவர்கள்) மற்றவர்களின் தூண்டுதலின்றி மற்றவர்களுக்காக முயற்சி எடுப்பர்.(பிறர் கேட்காமலேயே அவர்களுக்கு உதவுவர்) தீயோரும் ஒருபொழுதும் தம் பொருளில் ஆசைக் கொள்ளார். மாறாக ஒருவர் தூண்டுதலின்றி, தாமாகவே பிறர் பொருளை விரும்பி பறிக்க செயல் புரிவர். ஆகவே, இவ்வகையில் நல்லவர்கள். தீயோர்கள் இருவரும் ஒரே குணம் கொண்டவர்கள்.

Good people do not want anything for themselves as they always live for others. Without any prompting, they will take efforts for others (Good people help others unasked). Similarly, bad persons do not have any desire at all in their own belongings or properties. On the contrary, without any prompting by others, they take efforts on their own to wrest others' properties. Thus the focus of both good and bad people are centred on others.

74. कालान्तरे ह्यनर्थाय गृध्रो गेहोपरि स्थितः ।
खलोगृह समीपस्थः सदयोऽनर्थाय देहिनाम् ।।

Kaalaantare Hyanarthaaya Grudhro Gehopari Sthita: I
Khalo Greha Samipastha: Sadayo৲narthaaya Dehinaam II

**74.** பருந்து கழுகு கோட்டான் முதலியன வீட்டின் கூரை மேல் அமர்ந்தால் வீட்டுத் தலைவனுக்கு அழிவைத் தேடித்தரும் என்றுக் கூறுவதுண்டு. ஆனால் தீயவன் ஒருவன் வீட்டருகில் வசித்தால், அப்பொழுதே அவன் அவ்வீட்டுத் தலைவனுடைய அழிவிற்குக் காரண மாகின்றான்.

It is generally believed that when eagles or vultures sit on the roof of a house, they will bring calamity to the householder. However, if a bad person resides near his house, such a bad man instantaneously becomes the root cause of the householder's end.

75. शुष्कोपवासो धर्मेषु भैषज्येषु च लङ्घनम् ।
जपयज्ञश्च यज्ञेषु रोचते लोभशालिनाम् ।।

Sushkopavaaso Dharmeshu Bhaishajyeshu Cha Langhanam I
Japayagnascha Yagneshu Rochate Lobhashaalinaam II

*75. உலோபகுணம் உடையவனுக்கு, தர்ம சாத்திரத்தில் சொல்லப்பட்ட பட்டினியிருக்கும் உபவாசமே சிறந்த தர்மமாகத் தோன்றுகின்றது. ஏனெனில், நோயிற்கு சிறந்த மருந்தாக வயிற்றைக் காயப் போடுவதும், யக்ஞங்களில் ஜப யக்ஞம் சிறந்ததாகவும் புலப்படுகின்றது. அதனால், அவனுடைய செல்வத்தை செலவிட வாய்ப்பு இல்லை அல்லவா?*

A greedy man (in order to hoard his wealth), will find the fasting as set out in the Dharma Sastra (the Code of Good conduct) as the best Dharma. He will conclude that the best medicine for any disease is to starve and of all yagnas, the japa yagna (recitationof holy names with the beads) as it is the most inexpensive affair as compared to conduct of other religious rituals which will lead to depletion of his wealth.

76. किं वक्ष्यतीति धनिकाद्यावदुद्विजतेऽधनः ।
किं प्रक्ष्यतीति लुब्धोऽपि तावदुद्विदते ततः ।।

Kim Vakshyatiti Dhanikaadhyaava Dvijateऽdhana: I
Kim Prakshyatiti Lubdhoऽpi Taavadudvijate tata: II

**76.** ஒரு உலோபியான செல்வந்தனிடம் யாசிக்கும் ஒருவன் இவன் என்ன கொடுப்பானோயென்று அச்சமடைகின்றான். அதேபோல், அந்த செல்வந்தனோ எனில் என்ன கேட்பானோ என்றுப் பயப்படுகின்றான்.

A man who begs from a greedy rich man will fear as to what he would offer whereas that greedy rich man will fear what that begger would ask from him.

77. सर्वमातिथ्य शास्त्रार्थं साक्षात्कुर्वन्ति लोभिनः ।
भिक्षा कबलमेकैकं ये हि पश्यन्तिमेरुवत् ॥

Sarvamaatithya Shaastrartham Saakshaatkurvanti Lobhina: I
Bhikshaa Kabalamekaikam Ye Hi Pashyanti Meruvat II

**77.** தங்கள் வீட்டிற்கு வருகின்ற விருந்தாளிகளுக்கு உணவளிக்கும் ஒவ்வொரு கவளத்தையும் மேரு மலையை அள்ளிக்கொடுப்பது போல் நினைக்கின்றனர் உலோபிகள். சாத்திரத்தில், விருந்தாளிக்கு படைக்கும் அன்னம், மேரு மலைக்கு நிகரான புண்ணியமாகக் கருதப்படுகின்றது. இதை நன்கு அறிந்தவர்கள் உலோபிகள். ஏனெனில் அவர்கள் பார்வைக்கு ஒவ்வொரு கை அன்னமும் மேருவாகத் தெரிகின்றது.

The greedy householders consider each morsel of food offered to their guests (as part of their hospitality) as if they are giving something equivalent to Mount Meru. (it is said in Sastras that even a morsel of food offered to an aditi, ie. a guest is equivalent to Mount Meru. (they feel as if they give mount Meru itself to the guests).

78. धनपालः पिशाचो हि दत्तेस्वामिन्युपस्थिते ।
धनलुब्धः पिशाचस्तु न कस्मैचनदित्सति ।।

Dhanapaala: Pishaacho Hi Dattesvaaminyupasthite I
Dhanalubdha: Pishaachestu Na Kasmaichanaditsati II

78. தனபாலன் என்றும் தனலுப்தன் என்றும் (அதாவது செல்வத்தைக் காக்கும் பேய் என்றும் செல்வத்தின் மீது பற்றுள்ள பேய் என்றும் இரு பேய்கள்) உண்டு. செல்வத்தைக் காக்கும் பேய், செல்வத்தைக் காத்து பிறகு அதற்கு உரியவனிடம் ஒப்படைத்து விடுகின்றது. இரண்டாவதான செல்வப்பற்றுள்ளப் பேய், அதை ஒருவருக்கும் கொடுக்காது.

There are two types of ghosts namely, the Ghost which guards the wealth and the Ghost which is attached to the wealth. The first ghost will, after guarding the wealth, hand over the same to the owner. But the second ghost which is attached to wealth will not part with that wealth to anyone. (These two ghosts can be compared to two types of people to whom wealth may be given for safe-guarding. The first type will return the wealth. The second type due to deep attachment to the wealth, will not part with the same).

79. दातोरोऽर्थिमिरर्थ्यन्ते दातृभिः पुनरर्थिनः ।
कर्तुकर्मव्यतीहारादहो निम्नोन्नतं कियत् ।।

**Daataarorthimirarthyante Daatribhi: Punararthina: I**
**Kartukarmavyatihaaradaho Nimnonnatam Kiyat II**

**79.** பணக்காரர்களிடமிருந்து யாசிப்பவர்கள் உதவிப் பெறுகின்றனர். பின்னர், காலவசத்தின் காரணமாக அச்செல்வந்தர்களே கடினநிலை அடைந்து, அவர்கள் எவர்களுக்கு உதவினரோ, அவர்களிடமிருந்தே உதவிப் பெறுகின்றனர். தானம் கொடுப்பவன் தானம் வாங்குபவனாகவும், தானம் வாங்குபவன் தானம் கொடுப்பவனாகவும் மாறுகின்றான். இது பெரிய விந்தை !

Poor people beg from rich people . Later, due to change in fortune, the same rich people may be reduced to poverty and beg from the very people whom they helped earlier. A giver becomes receiver and receiver becomes giver. What a wonder is this !

80. स्वस्मिन्नसति नार्थस्य रक्षकः संभवेदिति ।
निश्चित्यैव स्वयमपि भुङ्क्ते लुब्धः कथंचनः ।।

Svasminnaasati Naarthasya Rakshaka: Sambhavediti I
Nischityaiva Svayamapi Bhunkte Lubdha: Kathamchana II

**80.** ஒரு உலோபியானவன், தனக்குப் பிறகு தன் சொத்தை பாதுகாக்க யாரும் இருக்கமாட்டார்கள் என்ற எண்ணத்தில், உடலில் உயிர் காக்க மட்டும் உண்கின்றான். (அவன் கடைசிவரை சொத்தை செலவிடமாட்டான்).

A miser, believes that no one would take care of his wealth after his time. Hence, he protects it to the best extent possible. He even eats only as much required to keep the breath in his body.

81. प्रस्थास्यामानः प्रविशेत्प्रतिष्ठेत दिनेदिने ।
विचित्रानुल्लिखेद् विघ्नांस्तिष्ठासुरतिथिश्चिरम् ।।

Prasthaasyamaana: Pravishetpratisheteta Dine Dine I
Vichitraanullikhed vignaamsthishtaa Suratithischiram II

*81. பிறர் இல்லத்தில் உண்டு வாழும் எண்ணத்துடன் வருபவன், அவ்வீட்டில் உள்ளோர் அவனை சில வழிகளினால் அனுப்பினாலும், உடனே போய் திரும்ப வந்துவிடுவான். அவனாகவே பயணம் செய்து (கூப்பிடாமலேயே) திரும்ப வருவான். அப்பயணத்தில் ஏற்படும் தடைகளை பிறர் வியக்கும் வண்ணம் கூறுவான்.*

A guest who has come down to stay longer, will go away if persuaded by some means by the holder. But he will again come back without being invited. He will recount strange instances of obstacles that he faced in his travel.

82. घटकं सम्यगाराध्य वैराग्यं यावदाहरेत् ।
तावदर्थाः प्रसिध्यन्ति यावच्चापलमावृतम् ।।

Ghatakam Samyagaaraadhya Vairagyam Yaavadaaharet I
Taavadarthaa: Prasidhyanti Yaavacchapalamaavrutam II

*82. ஒரு புத்திசாலியான மனிதன் எவ்வளவு காலம் வரை, தான் வெறுப்பு விருப்பு அற்றவனாக இருப்பதாகக் காட்டி (வைராக்கியம் உள்ளவனாகக்காட்டி) பிரமுகர்களிடமிருந்து பணம் சம்பாதிக்கிறானோ, அதுவரையில் அவனுக்கு வேண்டியப் பொருள் கிட்டும்.*

A clever man, as long as he pretends with his benefactor that he is totally unattached to any material benefit will earn enough money. (Untill he is expossed, he will earn a lot of money)

83. एकतः सर्वशास्त्राणि तुलसीकाष्ठमेकतः ।
वक्तव्यं किंचिदित्युक्तं वस्तुतस्तुलसी वरा ॥

Yekatha: Sarvasasthrani thulasikashtamekatha: I
Vakthavyam kimchidhithyukthamvasthuthasthulasi varaa:II

*83.* ஒருவன் சாஸ்த்ர படிப்பினால் நன்கு பணம் சம்பாதிக்கலாம். இன்னொரு வழி துளசி மணி அணிந்து பணம் சேர்க்கலாம். (சாமியாராக மாறி பணம் சேர்க்கலாம்) அதில் துளசி அணிவதே அதிகப் பொருள் கொடுக்கும். அதைப் பற்றி மேலும் சொல்லப்படுவதால் இங்கு கூறியது சிறிதே.

A man with scholastic learning can earn money. There is another way of making money. That is by wearing holy basil beads(by becoming a dubious monk), a person may earn more money. As this is being recounted more later, only part of it is spoken here.

84. विस्मृतं वाहटेनेदं तुलस्याः पठतागुणान् ।
विश्वसंमोहिनी वित्तदायिनीति गुणद्वयम् ॥

**Vismrutam Vaahatenedam Thulasya: Patataagunaan I**
**Visvasammohini Vittadhayinithi Gunadhvayam II**

*84.* துளசியின் பெருமையைக் கூறிய வாஹடர் அதன் முக்கியமான இரு நன்மைகளைக் கூற மறந்து விட்டார். அவை முறையே, அது உலகை மயக்கக் கூடியது. பணவரவை அளிக்கவல்லது என்பதே ஆகும்.

Vahata, an expert on ancient medicine, who spoke on the greatness of tulsi (basil leaves) had forgotten to speak of its two important benefits. They are namely it will delude the world and attracts money. (Wearing tulsi mala, a man can earn abundant wealth and mislead the world).

85. प्रदीयते विदुष्येकं कवौ दश नटेशतम् ।
सहस्रं दाम्भिके लोके श्रोत्रिये तु न किंचन ।।

Pradhiyate Vidhushye kamkavau dhasha Nate shatham I
Sahasram Dhambike Loke Srotriye Thu Na Kimchina II

*85.* இவ்வுலகில், பணம் பண்டிதனுக்கு ஒன்று என்றும், கவிக்கு பத்தும், நடிப்பவனுக்கு நூறும், ஆர்பாட்டக்காரனுக்கு ஆயிரம் என்னும் விகிதத்திலேயும் கொடுக்கப்படுகின்றது. ஆனால், வேதம் ஓதுபவனுக்கு ஒன்றும் கொடுப்பது இல்லை. (மற்றவர்களைக் காட்டிலும் வேத பண்டிதனுக்கு சரியான வரவு இருக்காது).

In this world, the money or gift given to a scholar will be one percent, to a poet, ten percent, to an actor, 100 percent and to a hoax (pompous man?) 1000 perceFnt. But nothing will be

given to a Vedic Scholar. (The Vedic scholar will not be able to earn enough in modern world).

86. कौपीनं भसितालेपो दर्भारुद्राक्षमालिका ।
मौनमेकासिका चेति मूर्खसंजीवनानि षट् ।।

Kaupeenam Bhasitalepo Darbhaa Rudraaksha Maalika I
Maunamekaasika Cheti Murkha Samjeevanaani Shat II

***86.*** கோவணம் மட்டும் தரித்தல், உடம்பு முழுதும் விபூதி பூசிக் கொள்ளல், தர்பைகளில் அமர்தல், உருத்திராட்சம் தரித்தல், மௌனமாக இருத்தல், ஓரிடத்தில் அசையாது இருத்தல் இவை ஆறும் பொருளீட்டும் வழிகள்.

Wearing a loin cloth, smearing holy ash all over the body, sitting on the seat of holy Kusa grass, wearning rudraksha beads, keeping silence, sitting like a rock in a place; all these are the means to make money.

87. वासः पुण्येषु तीर्थेषु प्रसिद्धश्च मृतो गुरुः ।
अध्यापनावृत्तयश्च कीर्तनीया धनार्थिभिः ।।

Vasa: Punyeshu Teertheshu Prasidhascha Mruto Guru: I
AdhyapanaaVrutthayascha Keertaneeyaa Dhanaarthibhi: II

***87.*** சம்பாதிக்க விரும்புபவர்கள், தாங்கள் மிகப் பெரிய நகரங்களிலும் புண்ய பூமிகளில் வசிப்பவர்கள்

என்றும், தங்களுடைய குருவானவர் ஞானத்தில் பெரியவர், அவர் இறந்துவிட்டார் என்றும், தாங்கள் மிக நிறைய சீடர்களுக்கு சாஸ்திரம் கற்பித்தவர்கள் என்றும் சொல்லிக்கொள்ள வேண்டும்.

People who want to make money should state that they come from very holy towns, their guru or teacher was a great Saint, who passed away long ago and they have taught a number of disciples. (Making these assertions will make one eligible as an object of veneration. As a result, money will be showered on them)

88. मन्त्रभ्रंशे संप्रदायः प्रयोगश्च्युतसंस्कृतौ ।
देशधर्मस्त्वनाचारे पृच्छतां सिद्धमुत्तरम् ।।

Mantrabhramshe Sampradaaya: Prayogaschyuta Samskrutau I
Desha Dharmastvanaachare Prechataam Siddhamuttharam II

*88.* சொல்லும் மந்திரம் தவறு என்று எவரேனும் எடுத்துச் சொன்னால், அது தங்கள் குரு சம்ப்ரதாயம் எனவும், செய்யவேண்டிய சில கர்மாக்கள் தவறினால் பிராயச்சித்தம் என்றும், ஆசாரம் தவறினால், அது தங்கள் தேச தர்மம் என்றும் கேட்டவர்களுக்கு உடனே பதில் சொல்லவேண்டும்.

If someone points out that recitation of the holy syllables (the mantra) by a dubious and half baked person is wrong, he should promptly reply that was the method taught by his Guru. Similarly, during certain religious rites, if any violation from the

prescribed rites was pointed out, it should promptly be replied that it was their native custom from where he hailed.

89. यथा जानन्ति बहवो यथा वक्ष्यन्ति दातरि ।
तथा धर्मं चरेत् सर्वं न वृथा किंचिदाचरेत् ।।

Yathaa Jaananti Bahavo Yathaa Vakshyanti Daatari I
Tathaa Dharmam Charet Sarvam Na Vrutaa Kimchidaacharet II

**89.** வேஷக்காரர்கள், தாங்கள் செய்யும் தர்மத்தை அனைவரும் பார்க்கும் வண்ணமும், தாங்கள் பொருள் பெறுபவர்களிடம் சொல்லும் வண்ணம், எல்லாரும் அறியும் வண்ணம் தர்மம் செய்யவேண்டுமே அன்றி ஒருவரும் அறியா வண்ணம் செய்யக்கூடாது.

Hypocrites do acts of charity pompously in order to show off to the whole world. If no one takes notice of the same, they will not do any charity.

90. आनन्दबाष्परोमाञ्चौ यस्य स्वेच्छावशंवदौ ।
किं तस्य साधनैरन्यैः किंकराः सर्वपार्थिवाः ।।

Aananda Bashparomaanjau Yasya Svecchaavashamvadau I
Kim Tasya Saadhanairanyai: Kimkaraa: Sarvapaarthivaa:II

**90.** எவருக்கு இறைவனை நினைத்த அளவில் ஆனந்தக் கண்ணீர் பெருகுகின்றதோ, ரோமங்கள் சிலிர்க்கின்றதோ, அவருக்கு பொருள்களினாலும் மற்றவற்றினாலும் யாது பயன் ? அவருக்கு அரசர்களும், அடிபணிந்தவர்களே ஆவர்.

One who gets horripilation and sheds tears of ecstasy at the very thought of God, to such aperson what is the use of other things in the world ? Even Kings will bow before that soul.

91. दण्ड्यमाना विकुर्वन्ति लाल्यमानास्ततस्तराम् ।
दुर्जनानामतो न्याय्यं दूरादेव विसर्जनम् ।।

Dandyamaanaa Vikurvanti Laalyyamaanaastatastaraam I
Durjanaanaamato Nyaayyam Duraadeva Visarjanam II

**91.** தீயவர்களைத் தண்டித்தால் அவர்கள் மேலும் தீமைச்செய்வர். அவர்களிடம் நட்புப் பாராட்டினால், அவர்களை பயந்தவர்கள் என அவர்களை பயந்தவர்கள் என்று நினைப்பர். எனவே, அவர்களை ஒதுக்கி வைத்தலே நீதியாகும்.

If bad people are punished, they will do more harm. If friendship is mainted with them, the same will be mistaken as weakness or fear. Hence, it is better to keep a safe distance from them.

92. आदानमीषद् दानं च किंचिद् कोपाय दुर्धियाम् ।
संपूर्णदानं प्रकृतिर्विरामो वैरकारणम् ।।

Adaanameeshad Daanam cha kimchit kopaya Durdhiyam I
Sampoornadhaanam Praketivirama Vairakaaranam II

**92.** தீயவர்களுக்கு கொஞ்சம் கொடுப்பதும், கொடுக்காமல் இருப்பதும் அவர்களை சினமடையச் செய்யும். அதிகமாகக் கொடுத்தால் அவர்கள் தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருப்பார்கள். அவர்களுக்கு

கொடுப்பவரிடம் நன்றி இருக்காது. கொடுக்கா விட்டாலும் அது பகைக்கு வித்தாகும்.

Evil minded people get angry whether one gives money or not. If money is given liberally, the same will lead to more demands from them. They will not be grateful to the donors. If no money is given to them that will also lead to enmity with them.

93.ज्यायानसंस्तवो दुष्टैरीर्ष्यायै संस्तवः पुनः।
अपत्यसंबन्धविधिस्त्वनर्थायैव केवलम् ।।

Jyaayaana Samstavo Dushtaireershyaayai Samstava: Puna I
Apatya SambandhaVidhistvan Anarthaayaiva Kevalam II

**93.** தீயவர்களோடு பழகாமலிருப்பதே நலம் அவர்களோடு ஒத்துச்சென்றால் அது பொறாமைக்கு வழி செய்யும். அவர்களோடு தொடர்பு வைத்துக்கொள்வது தன் அழிவுக்கு வழி வகுக்கும்.

It is better to keep a safe distance from the bad people. If one agrees with them that will promote jealousy. Being in contact with them will lead to ones disaster.

94. ज्ञातेयं ज्ञानहीनत्वं पिशुनत्वं दरिद्रता ।
मिलन्ति यदि चत्वारि तद्दिशेऽपि नमो नमः।।

Gnyaateyam Gnyaanaheenatvam Pishunatvam Daridrataa I
Milanti yadi Chatvaari Taddishepi Namo Nama: II

**94.** பங்காளியாக இருத்தல், அறிவற்று இருப்பது, கோள் சொல்லல், வறுமை இவை நான்கும் யாரிடம்

நிறைந்துள்ளதோ, அந்த மனிதர் இருக்கும் திசைக்கே ஒரு வணக்கம்.

One who has all these four, namely, having cousins, being a fool, being a tale bearer, facing poverty, a big salutation to the direction itself where that person resides.

95. परच्छिद्रेषु हृदयं परवार्तासु च श्रवः ।
परमर्मसु वाचं च खलानामसृजद् विधिः ॥

Parichchidreshu Hrudayam Paravaartaasu Cha Srava: I
Paramarmasu Vacham Cha Khalaanaamasrujad Vidhi II

**95.** நான்முகன் தீயவர்களுக்கு மற்றவர்கள் பற்றிய குற்றங்களை ஆராய மனமும், மற்றவர்கள் பற்றிக் கேட்க செவிகளும், மற்றவர்கள் பற்றிய ரகசிய விஷயங்களைப் பேச வாக்கையும் கொடுத்துள்ளான்.

The creator, Lord Brahma, has given the bad people, a mind to analyze tthe mistakes of others, ears to hear the secrets of others., tongue speach to speak ill or gossip about others.

96. सदा जपपटो हस्ते मध्ये मध्येऽक्षिमीलनम् ।
सर्वं ब्रह्मेति वादश्च सद्यः प्रत्ययहेतवः ॥

Sadha japapato Haste madhye Madhyesakshimeelanam I
Sarvam Brahmethi vaadhascha Sadhaya: Prathyayahethava: II

**96.** எப்பொழுதும் கையில் ஜபம் செய்யும் மாலையும், ஜபப்பையும், ஜபம் நடுவினில் அடிக்கடி கண்களை மூடிக்கொள்ளல், அடிக்கடி எல்லாம் ப்ரஹ்மம் என்றுக் கூறல், இவை மக்கள் வேஷக்காரர்களை நம்பும் வழிகள்.

Pretentious holy men always keep in hand rosary beads and pretend to do penance. In between their recitation, they close eyes from time to time, they keep uttering frequently that everything is Brahman. These are all the ways to make people believe them.

97. आमध्याह्नं नदीवासः समाजे दैवतार्चनम् ।
सततं शुचिवेषश्चेत्येतद् दम्भस्य जीवितम् ।।

Aamadhyahnam Nadeevasa Samaaje Devataarchanam I
Satatam Suchiveshaschet Yetad Dambhasya Jeevitam II

**97.** மதியம் வரையில் அனுஷ்டானங்கள் நதிக்கைரயில் அமர்ந்து செய்தல், பின்னர் பண்டிதர்களும், சாத்திரமறிந்தவர்களைக் கண்டால் வெகுநேரம் தெய்வ வழிபாடு முதலியவை மேற்கொள்ளல், அதன்மூலம் அந்த அறிஞர்களுக்கு எவ்விதமான சாஸ்திர விஷயஞான விசாரங்களுக்கோ விவாதங்களுக்கோ இடங்கொடாமை மற்றும் எப்பொழுதும் மிகச் சுத்தமானப் பகட்டு வேடம் ஆகிய இவை பணம் பண்ணும் உபாயங்கள்.

Pretentious Holy men will observe elaborate rituals on the river bank till afternoon Also, in the great religious assemblies, if they happen to notice that great scholars and learned persons have gathered to discuss finer points of philosophy they will deliberately avoid such discussions by performing elaborate rituals, for fear of exhibiting their ignorance. They will always be found pompously dressed. These will be the ways of making money.

98. तावद् दीर्घं नित्यकर्म यावत् स्याद् द्रष्टृमेलनम् ।
तावत् संक्षिप्यते सर्वं यावद् द्रष्टा न विद्यते ।।

Taavad Dheergham Nityakarma Yaavat Syaad Drashtrumelanam I
Taavat Samkshipyate Sarvam Yaavad Drashtaa Na Vidhyate II

**98. தான் பண்ணும் கர்மானுஷ்டானங்களை பார்ப்பவர் இருக்கும் வரை, அவற்றை விரிவாக செய்வதும், தான் செய்யும் அனுஷ்டானங்களை பார்க்க ஒருவரும் இல்லை என்று தெரிந்தவுடன் மிக சுருக்க மாகவும் செய்வது ஒரு போலியின் வழிமுறைகள்.**

As long as there are people to observe or witness the rituals performed by them, the Pretentious holy men will perform elaborate rituals for a long duration. The moment they realise that there is no one to witness or see their rituals, they would complete them very fast. Such are the methods of Pretentious people.

99. विषेण पुच्छलग्नेन वृश्चिकः प्राणिनामिव ।
कलिना दशमांशेन सर्वैः कालोऽपि दारुणः ।।

Vishena Pucchalagnena Vreschika: Praaninaamiva I
Kalinaa Dashamaamshena Sarvai: Kaalopi Daaruna: II

**99. தேள், தன் கொடுக்கிலுள்ள விஷத்தினால் பிராணிகளைக் கொடுமைப் படுத்துகின்றது. இப்பொழுது கலியின் பத்தில் ஒரு பங்கு ஆட்சியிலேயே எல்லாக் காலங்களிலிருந்தும் கடுமையாக உள்ளது.**

A scorpion terrorises other beings through the poison that it has in its tail. The Kali Purusha or dark age of Kali, only through part

of his rule over this earth, has made this present age more terrifying than the bygone ages (and to that extent worse than a scorpion).

100. यत्र भार्यागिरो वेदा यत्र धर्मोऽर्थसाधनम् ।
यत्र स्वप्रतिभा मानं तस्मै श्रीकलये नमः ।।

Yatra Bhaaryagiro Vedaa Yatra Dharmortha Saadhanam I
Yatra svapratibhaa Maanam Tasmai Sri kalaye Nama: II

***100.*** எந்தக் கலியில் மனைவியின் வார்த்தைகள், வேததர்ம சாஸ்திரம் போல் பின்பற்றப்படுகின்றதோ, எந்தக் கலியில் பொருள் ஈட்டுவதே தர்மமாகக் கொள்ளப் படுகின்றதோ, எந்தக் கலியில் தனக்கு மனதில் பட்டதே தர்மமாகக் கருதப்படுகின்றதோ, அந்தப் பெருமை வாய்ந்த ஸ்ரீ கலி புருடனுக்கு வணக்கம்.

In the Kali age, where the words of one's wife are taken as the veritable code of conduct or dharma sastra, where earning money is the only virtuous activity, where whatever thought appears in the mind is the dharma (virtue), to that Kali Purusha or dark age, a big salutation.

101. काममस्तु जगत् सर्वं कालस्यास्य वशंवदम् ।
कालकालं प्रपन्नानां कालः किं नः करिष्यति ।।

Kaammastu Jagat Sarvam Kaalasyaasya Vashamvadam I
Kaalakaalam Prapannaanaam Kaala kim Na Karishyati II

***101.*** இந்த உலகம் முழுவதும் கலிக்கு வசப்பட்டு யிருப்பினும் காலனுக்குக் காலனான சிவபெருமானை

*சரண் அடைந்தவர்களை இந்தக் கலி என்ன செய்துவிட முடியும்? (ஒன்றும் செய்ய முடியாது என்பதுமுடிவு).*

Let the whole world be reigned by the dark age of Kali. But what can this age of Kali do to a devout who has totally surrendered himself to Lord Shankara, the One who determines the life of even God of Death. (Nothing can be done by Kali Purusha to that devotee).

102. कविना नीलकण्ठेन कलेरेतद् विडम्बनम् ।
रचितं विदुषां प्रीत्यै राजास्थानानुमोदनम् ।।

Kavina Neelakantena Kalereted Vidambanam I
Rachitam Vidushaam Preetyai Raajaasthaanaanumodanam II

***102.*** *இந்த கலிப்புருடனுடைய பரிகாசம் என்னும் இச்செய்யுள்கள், அரசவையில் அறிஞர்களின் அறிவுக்கு மகிழ்ச்சி ஊட்ட ஸ்ரீ நீலகண்ட கவியினால் இயற்றப் பட்டது.*

This satrical work by the name Kali Vidambana, has been composed by the poet Sri Neelakanta, for the purpose of regaling the intellectual giants decorating the Court of the king.



## References:

1. **Shiva Leelarnavam**
   by SriV. Swaminatha Athreya

2. **Kali Vidambanam,**
   translated into Tamil by Sumathy,
   Sri Kamakoti Goshastaanam.

3. **History of classical Sanskrit Literature**
   by M. Krishnamachariar.



